*Vaiciyamittiran*
*Puttakam 10, ilakkam 33*
*August 16, 1920*

Record no. 1102

REG. NO. M. 940.

சிவமயம்.
வேலுமயிலுந்துணை.

"VYSIAMITRAN"
Karaikudi.

சந்தா விபரம்.
வருடம் 1-க்கு ... ரூ. 5—0—0
மாதம் 6-க்கு ... ரூ. 2—12—0
சிறுவர், இக்கப்பூர், கெட்டால் கைகேசன்
முதலான வெளிநாடுகளுக்கு வருடம் 1-க்கு
தபால் கூலியுடன் ரூ. 6—0—0

# வைசியமித்திரன்

பிரதிசோமவாரமும் பிரசுரிக்கப்பெறும்.

"எப்பொருள் யாயார்வாய்க் கேட்பினு மப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு."

விளம்பர விகிதம்
பத்தி 1-க்கு மாதம் 1-க்கு ரூபாய் 25-0-0.
கோண்டாலம் விளம்பரம் செய்வோர்கள்
எழுதிக் குறைத்த விகிதம் தெரிந்து
கொள்ளலாம். இல்லை விளம்பரங்களுக்கு
அடிவைக்கு வரி 1-க்கு அணா 4.

பு. 10. காரைக்குடி ரௌத்திரிஞு ஆவணிமீ 1உ திங்கட்கிழமை 1920ஞு ஆகஸ்டுமீ 16 உ. இ. 33.

## சமரசபோதினி.

இஃதோர் தமிழ் வாரபத்திரிகை பிரதி புதன்கிழமை தோறும் தஞ்சையினின்றுவெளிவருவது. தமிழ்நாடுகளிலெங்கும் சுதந்திரத்தை கமையவர்களுக்குள எழுப்பி நமதேசம் சீக்கிரம் சுயஆட்சி பெறவேண்டி இப்பத்திரிகை ஏற்பட்டு நடத்தப்பட்டு வருகிறது. இந்தியாவின் பிறப்புரிமைகளைப் பொன்னே போல் போற்றி அவைகளுக்கு இடையூறுகள் வாராமல் காப்பதும் இப்பத்திரிகையின் முக்கிய விரதமாகும். அதிகாரவர்க்கத்தினர்களின் நியமசெயல்களை சுவு ஜீரக்ஷயின்றிக் கண்டிக்கப்பட்டு அந்நிய செல்களினால் வரும் கெடுதிகளைப் பொது ஜனங்களுக்கும் சவர்ன்மெண்டாருக்கும் அறிவிப்பது இதன் முக்கிய வேலை. கிராம ஜனங்களின் முன்னேற்றம் பொருளாதார விஷயங்கள் தொழில் விவசாயம் வியாபாரம் முதலியவைகள்தெளிவாகவும் தைரியமாகவும் எழுதப்படும். வருஷ சந்தா தபால் கூலியுள்பட ரூபாய் 5! ஆறு மாதச் சந்தா ரூபாய் 3. வெளிநாடுகளுக்குச் சந்தா ரூபாய் 7. ஒவ்வொரு தமிழரும் இப்பத்திரிகையை வாசிப்பது அவசியமாகும்.

இ. சூரியநாராயண ஐயர் பி ஏ பி எல்
பத்திராதிபர் "சமரசபோதினி".
தஞ்சாவூர்.

---

## கலியுக வர்த்தமானி.
### அருமையான வாரத்த தமிழ்ப்பத்திரிகை.

12 வருஷமாக நடைபெறுகிறது.

இதில் பொதுஜன நன்மையைக்குறித் தவிஷயங்களும், பசதசரித்திரங்களும், கலவி, கைத்தொழில்வி, வியாபாரம், விவசாயம் முதலியவைகளைப் பற்றிய அருமையான வியாஸங்களும், நீதிக்கதைகளும், நியாயஸ்தலம், யுத்தமுதலிய சமாசாரங்களும் வெளியாகிறது.

சந்தா விவரம்—தபால் கூலியுடன்
உள்நாட்டுக்கு ஒரு வருஷத்திற்கு ரூ1-0-0
வெளிநாடுகளுக்கு ஷை ரூ.5-0-0
மாதிரி பிரதிக்கு அரை அணாவடாம்பு அனுப்பவும்.

பத்திராதிபர்—டி. முத்துசாமி செட்டியார்
17, லிங்கசெட்டி தெரு,
பார்க்டவுன் போஸ்ட், மதறாஸ்

---

## வித்யாபிமானம் நிறைந்த கனவான்களுக்கு விக்ஞாபனம்.

நான் பர்மாவில் சிலகாலம் தங்க வேண்டியவசியமாக இருக்கின்றமையால் தேவகோட்டை தர்மவித்தியா ஞானோதய சங்கத்திற்கு உதவிபுரிய விரும்பும் கனவான்கள் காரைக்குடி வைசியமித்திரன் ஆபீஸுக்கு அனுப்பாமல் சங்கம் உதவிக்காரிய தரிசி தேவகோட்டை ஸ்ரீமான் கருசி சொர்ணலிங்கம் செட்டியாரவர்களுக்கு, ரூபாயை யனுப்பும்படி கோருகிறேன். சித. இராமநாதன்செட்டி,
காரியதரிசி,
தர்மவித்யா ஞானோதய சங்கம்

---

## ஒப்பேவார்த்தை.

சகல நீர் வியாதி, மூலம், க்ஷயம், பவுத்தரம், கிரந்தி, படை, நீர்குழிப்புண், இவைகளினின்று சொஸ்தமடைய, உண்மையானவழி. இதன்பலனை அடைய விரும்புவர்கள், ஒரு அணாவுக்குஸ்டாம்பு அனுப்பினால்அவ்வழியை அறிவிக்கப்படும்.

### சோப்செய்யும் விதம்

காஸ்டிக் ஸோடா இல்லாமல் கடைச் சரக்கால் செய்யப் பட்ட எளிய சிறு ரகசிய புத்தகம்.

வி பி உள்பட 1—3—0

டி. ராஜ் சுண்டர் ஹிந்து டாக்டர்
சி. காஞ்சீபுரம்

---

வரகவிதிரு அ.சுப்பிரமணியபாரதி
[இயற்றியவை]

## விஜயபாஸ்கரன்.
அல்லது
### ஒரு குற்றத்திற்கு ஒன்பது குற்றம்.

விலை ரூ 2—0—0 (புதியது)

2. ஸ்நேகலதா. வாழ்க்கைத்துணையைக் கண்டித்துப் பேசும்அரியபுத்தகம்விலை அணா 8

3 வஜ்ரலேகை அப்பரியும் மாறன் சரித்திரம். அதிஅதிசயோக்தமமைந்தது.
விலை ரூ. 0—12—0

4. மதாலஸா அக்யோக்ய தம்பதிகளின் அரிய குணங்களைவெகு அற்புதமாக விளக்குவது விலை ரூ. 0—4—0

5. இராமாயண ரகசியம், ஸ்ரீராமர் சீதை, பரதன், குகன், மாருதி, விபீஷணன் இவர்களுடைய உயர்ந்தகுணங்களை எடுத்து இனிய-எளிய-நடையில் உணர்த்தக்கபடி விளக்கியுள்ள அரியதோர் சிறியநூல்
விலை 0—8—0

இன்னும்இதருடையாவலும்கிடைக்கும். வேண்டியவற்றிற்கு எழுதலாம்.

ஸ்ரீ ஸ்ரீபாலசுப்பிரமணியம் கம்பெனி,
ராயபேட்டை P. O சென்னை

---

## நிருபநேயர்களுக்கு விசேஷ அறிவிப்பு.

மித்திரனுக்கு எழுதும் நிருபர் களிற் சிலர், தமது சொந்த விருப்பு வெறுப்புக்களைப் பொது வியாசங்களில் புகவிட்டுப் படிப்போர்மனத்தை விரோத வுணர்ச்சிக்கு உறைவிடமாக்க முயலுகின்றனர். இனி அவ்வாறு எழுதக்கூடாதென்றும், நியாயமின்றிய செயல்களை நியாயவாதச்செயலாலும் நியாய எழுத்தாலும் வெல்லவேண்டுமெனவும் நாம் நிருபர்களுக்குப்பன் முறை வற்புறுத்தியுள்ளோம். இனி, அதைக் கவனியாமல் எழுதப்படுகின்ற வியாசங்கள் கண்டிப்பாய் மித்திரனில இடம் பெறாதென்பதை இப்பொழுதும் நண்பர்களுக்குத் தெரிவிக்கின்றோம்.

தனிப்பட்ட ஒரு சிலரையோ ஒரு பகுதியாரையோ தாக்காது, யுக்திக்குப் பொருந்திய பொது நலன் தரும்வியாசங்களை மித்திரன் எப்பொழுதும் அங்கீகரிப்பதில் பின்வாங்கமாட்டான்.

பத்ராதிபர்.

---

## விளம்பரம்.

இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனின், எனது பிதா அரு. அரு. குமரப்பசெட்டியார் பத்திரிகைகள் வாயிலாகத் தன்னிடம் பிதுரார்ஜிதமான பூர்வீகஸ்தாவர ஜங்கமசொத்துக்கள் ஒன்றுமில்லையென்றும், எல்லாம் ஸ்வயார்ஜித சொத்தென்றும் நான் வாங்கும் கடன் தன்னையாவது தன் சொத்துக்களையாவது கட்டுப்படுத்தமாட்டாதென்றும் தெரிவித்திருப்பதை நான் ஆக்ஷேபிக்கிறேன். இப்பொழுதிருக்கும் சொத்துக்கள்யாவும் பிதுரார்ஜித சொத்துக்களே. ஆகையால் எனக்கு அதில் பூராபாத்தியத்தை உண்டு. பிறர் தூண்டுதலினாலோ, அல்லது வேறு எவ்விதக் காரணத்தாலோ மேற்கண்ட விளம்பரதார் குறிப்பிட்டிருக்கும் பொய்யான சமாசாரங்களை நான் மறுத்து எனக்கு எவ்வித சுதந்திரமும் மேற்படிசொத்துக்களில் உண்டு,என்பதை இதன் மூலம் அறிவித்திருக்கிறேன்.

இப்படிக்கு,
அரு. அரு. சுப்பிரமணியஞ் செட்டி.
கீழச்சிவல்பட்டி
இராமநாதபுரம் ஜில்லா.

---

## கையில் கட்டும் லேடிஸ் ரிஸ்ட் வாட்சு.

இந்தக்கெடிகாரம் ரமணியமாகவும் காலத்தைச் சரியாகக் காட்டக்கூடியதாகவும் பார்வைக்கு மிகவும் சுந்தரமாகவும் கைக்கு ஒரு ஆபரணமாகவும் காணப்படும்.

காரண்டி 2 வருடம். கையில்கட்டும் தோல்பட்டையுடன்.
விலை ரூபா 4—8—0.

விலாசம்:—
கனக ஸ்ரீ கம்பெனி,
பார்க்டவுன் போஸ்டு.
மதராஸ்

---

கவனியுங்கள்! கவனியுங்கள்!!

கைகண்டது

## முகப்பருவு மருந்து.

புட்டி 1-க்கு விலை அணா 0-6-0.
வி. பி. சார்ஜு பிரத்தியேகம்.

ராஜு அண்கோ., ஈரோடு.

---

## இரவில் மணிபார்க்கும் 8நாளை ரேடியம்ரிஸ்ட்லேட்கெடிகாரம்.

இரவில் மணி பார்ப்பதற்கு இக்கெடிகாரத்திற்கு விளக்கு முதலிய வேறு வெளிச்சம் வேண்டியதில்லை.இதில்ரேடியம் என்னும்ஓர்விதவஸ்துவை நெம்பர்களிலும்முள்களிலும்சேர்த்திருப்பதால்இரவில்மணிநன்றாய்த்தெரியும் இருட்டுஎவ்வளவு கருக்கலாயிருக்குமோ அவ்வளவிறதும் எண்கள் நன்றாய்த்தெரியும். இது சரியான டைம் காட்டக்கூடியது உயர்ந்த சாமான்களால் செய்தது இதை பார்ப்பவர்கள் ஆச்சரியப்படுவார்கள்வெகுஅழகாய்இருக்கும்(1)8நாளைரிஸ்ட்லெட் ரேடியம் கெடிகாரம்ரூ 7-8-0 (2) 4நாளைரேடியம்ரிஸ்ட்லெட் கெடிகாரம் ரூபா7-8-0(3) 'வுண்டுரேடியம்ரிஸ்ட்லெட் கெடிகாரம்ரூ 6-8-0 (4) ரேடியம் இல்லாத சாதாரிஸ்ட்லெட் கெடிகாரம் ரூபா 5-0-0 ஒவ்வொரு கெடிகாரத்திற்கும் உயர்ந்ததோல்பட்டை அனுப்பப்படும். கையில் கட்டும் ரிஸ்ட்லெட் கெடியாரத்திற்கு தோல்பட்டைக்கு பதில் வெள்ளியில் செய்த ஸ்பிரிங்கு பாண்ட் வெட்பட்டை 1-க்கு கிரயம் ரூ.2-8-0 கேட்டால் வேண்டியவர்களுக்கு அனுப்பப்படும். ஆர்டர் செய்கிறவர்கள்டேப்பரின் பெயரைக்கண்டு எழுதவும்.

சி. எ. செங்கல்வராய நாயுடு.
ந 25 பெருமாள் கோவில்தோட்டம்
1-வது தெருவு மதரூஸ்

---

## சிங்கார சந்திரவதனி.
### ஒர்நாட்டுக்கோட்டை
நகரசிகாமணியால் எழுதப்பட்டது

இப்புத்தகம் கண்டனூர் ஸ்ரீமான் வீர. அரு. அருணாசலஞ்செட்டியார் அவர்களால் வெளியிடப்பெற்ற ஜனசார சீர்திருத்த நாவல். கதைப்போக்கு படிப்போர் உள்ளத்தைக் கவருந்தன்மையிலும், கதையினூடே பல அரிய போதனைகளைக் கொண்டும் விளங்குகின்றது. சீர்திருத்தத்தை அவாவும் இக்காலத்தில் இந்நாவல் ஒரு பெரிய வழிகாட்டியாக விளக்கலாம். சொற்பப்பிரதிகளே கைவசமுள்ளன வாங்குமுந்துங்கள்.

விலை ரூ 1—4—0.

## கண்ணம்மாள்,
### கற்பொழுக்க நாவல்.

பெண்மக்கள் தாராளமாய் வாசிக்கக்கூடிய கதை இதற்கு முகவுரையளித்த கண்டனூர் ஸ்ரீமான் முராம சோமசுந்தரஞ்செட்டியார்சாலப் புகழ்ந்து பேசியிருக்கிறார். மூன்று அழகிய சித்திரப்படங்களுடன் புதிதாக அச்சிடப்பட்ட பதிப்பு.

விலை அணா 8.

## இன்னுரைக்களஞ்சியம்

நாற்பது அருமையான விஷயங்களை நாற்பது அதிகாரங்களில் வெளியிடப் பெற்ற நல்ல நூல்.நல்லுரைத்திரட்டு இதுஒன்றேயாகும் விலை ரூ 1-0-0

நவீன கதா புத்தகசாலை
11, மங்மாரி வீதி
இரங்கூன்.

அல்லது, 8, ரூனிபஜார்சாலை
சென்னை.

---

## நோட்டீசு.

சிவகெங்கை டி மு கோர்ட்டு 1920ஞு O S நிர் 86-ல்

சதானந்தம் பிள்ளை வாதி.

கருப்பையாத் தேவன் வகையறா பிரதிவாதிகள்

வாதிக்குப் பிரதிவாதிகள் 23-4-1912ல் எழுதிக்கொடுத்திருக்கிற கடன் தஸ்தாவேஜின் பேரில் வாதியால் ஷை நிம்பர் பிராது செய்து பிரதிவாதிகளுக்கு சமன்போனதில் மேற்படி 1வது பிரதிவாதிக்கு சமன் சார்வாகாததால்சப்ஸ்டிடியூடெட் சர்விசுக்கு மனுப்போட்டு ஆர்டராகி மேற்படி நிம்பர் நாளதுஆகஸ்டு மாதம் 23உக்கு வாயிதா வேற்பட்டிருக்கிறபடியால் எதிர்வாதம் செய்து கொள்ளக்கூடியவர்கள் மேற்படி வாயிதாவில் வந்து எதிர்வாதம் செய்து கொள்ளலாம்.

சிவகெங்கை } P A சுப்பிரமணிய
7-8-20 } அய்யர் வாதிவக்கீல்.

---

வார்ஸாவின் அபாயநிலை

வார்ஸாவுக்கு 50 மைல் கிழக்கேயுள்ள சைட் விட்லை நோக்கி வரும் திருப்புகள் பக்கத்துக்கரை வழியாய் 99 மைல்போய் பின்னடைந்துள்ளன. கரோமாகசண்டை நடந்தபின்னர்மேற்படிஆறு கடக்கப்பட்டது. பிரெஞ்சு பிரிட்டிஷ்மிஷின்களும்,நேசக் கக்ஷிப்பிரஜைகளும் வார்சாவிலிருந்து வெளிப்போய் விட்டனர்.

---

இந்தியாவில் ஜனங்கள்

இந்தியாவில் 2000 பட்டணங்களும், 7000 கிராமங்களுக்கு மேற்பட்டும் இருக்கின்றன. இவற்றில் வசிப்போரின் தொகை 31c மில்லியன்களாம். (மில்லியன் என்பது லெக்ஷம்.)

---

## 'ஆனந்தபோதினி.' ஆறும் வருடம்.

மாதச் சஞ்சிகையை விரும்பும் நம் தமிழ்நண்பர்களுக்கு 'ஆனந்தபோதினி' யைவிடச் சிறந்த சஞ்சிகை கிடையாது. 'ஆனந்த போதினி' தமிழ் நாட்டில் தலைமைபெற்று யாவராலும் விரும்பப்படுவது தமிழ் நாடறிந்ததே; இது சிறந்த விஷயம் குறைந்த சந்தாஉடையது பல்லாயிரம் சந்தாதாரர்கள் இப்பத்திரிகையை வாசித்துப் பயன் பெறுகிறார்கள். இதன் பெருமையைப்பற்றி ஆயிரக்கணக்கான நற்சாட்சிப்பத்திரங்கள் வந்துகொண்டிருக்கின்றன. ஆடிமாதம் இப்பத்திரிகைக்கு ஆறுவதாண்டு பிறந்துவிட்டது, தாங்களும் இப்பத்திரிகைக்குச் சந்தாதாராக வேண்டியது அவசியம். மாதிரி சஞ்சிகை இனாம்.

வருடசந்தா தபால்கூலி யுள்பட, இந்தியா, பர்மா சிலோனுக்கு ரூ 1 0 0
பினாங்கு, சிங்கப்பூர், நெட்டால் முதலிய வெளிநாடுகளுக்கு ரூ 1 4 0

விலாசம்:—'ஆனந்த போதினி' ஆபீஸ்.
நெ, 6, வெங்கடேச மேஸ்திரி தெரு மதரூஸ்.

---

## மகத்வமுள்ள

### மஹானால் கிடைத்த அருமையான மூலிகையும் தாயத்தும்.

குஷ்டம், க்ஷயம், மூலம், கிரணி, பிரமை பைத்தியம், இருமல், வலிப்பு, மூத்திர வியாதி, முதல் நாள்பட்ட சகலவிதவியாதிகளும் பலவித கஷ்டங்களும் கவலைகளும் உடனே நீங்கும்.

புத்திரபாக்கிய மில்லாதவர்களுக்கு 48 நாளில் கெர்ப்பம் உண்டாகும். மஹானுடைய கிருபையால் மனம்போல் குழந்தை பிறக்கும். வேண்டியவர்கள். பதிலுக்கு (ஸ்டாம்பு)வைத்தனுப்பவும் அடுத்த தபாலில் சகல விபரமும் கிடைக்கும் எந்த தேசத்து ஸ்டாம்பும் அனுப்பலாம்.

எஸ். ஏ. கே. பிள்ளை, மேட்டுப்பாளையம்.
(கோயம்புத்தூர் ஜில்லா சவுத் இந்தியா)

## பத்திரிகை ஆராய்ச்சி.

### ஆசியாகண்டத்திற்கு நேரும் விபத்து.

சைனு-ஜப்பானுக்கு நிகழக்கூடிய விவாதங்கள்.

சமாதானம் பேசும் காலத்தில் சீனாவுக்கு சம்பந்தப்பட்ட ஷாண்டங் பிரதேச விஷயமாய் ஜப்பான்விரோத உணர்ச்சியே காட்டிவந்தது. ஐரோப்பிய தேசக்கக்ஷிகளும், அமெரிக்கர்களும் நிறம் சம்பந்தமாய் ஆசியாகண்டத்தவர்களை வெள்ளை ஜாதியாருடன் சமத்துவநிலையிருந்த உடன்பட மறுத்துவிட்டனர். சீனாவுக்கும் ஜப்பானுக்குமுள்ள சண்டை முன்னிலும் அதிகமாவதோடு கீழ் தேசத்துக்கும் மேல் தேசத்துக்கும் உள்ள நிலையையும் அமிழ்த்திவிட்டது. அதோடு ஷாண்டாங் பிரதேச விவகாரத்தால் சீன ஜனங்களுக்குள் ஒற்றுமையுணர்ச்சியும் தோன்றவாரம்பித்துவிட்டது. இரு தேசங்களிலும், ராணுவத்திமிர் கொண்டவர்களும், அதிகாரத்திமிர் கொண்டவர்களும், சேர்ந்து ஆசியாவான உலகத்தை ஜயிக்கவேண்டுமென்னும் பேராவாக்கொண்டிருக்கின்றனர். மானிடவர்க்கத்தில் அன்புகொண்ட ஜனநாயகக் கக்ஷியார்கள் பரஸ்பர தேசத்தாரின் சம்மதத்தையும் ஒற்றுமையையும் விரும்புவதோடு, உள்நாட்டில் இழிந்தஜாதியாரின் கல்வியபிவிருத்தியில் சிரத்தைவேண்டுமெனவும், எல்லா விதத்திலும் முன்னேற்றமடையவேண்டுமெனவும், ஜனநாயகக் கொள்கையே பரவவேண்டுமெனவும் சொல்கின்றனர். மேற்சொன்ன இரு கக்ஷியாரில் ஆசியா கண்டத்தில் எந்தக் கக்ஷி மிகுந்த ஆதிக்கம் பெறும்? உலகத்திலுள்ள மனித வர்க்கத்தின் ஜீவிதங்களை எந்தக் கக்ஷி ஆட்டிவைக்கும்? என்பதே தற்கால ராஜீய நிபுணர்களின் ஆலோசனை. உண்மையில் ஆசியா கண்டத்திலுள்ள ராணுவத்திமிர் பெற்றவர்களின் எண்ணம் ஈடேறுமாயின் உலகத்திற்கே இதோர் நாசகாலமென்னலாம். ரோம்விழுந்து போனதின் பின் நிருத்தியமைக்க ஐரோப்பாக்கண்டம் உறுதியாகவே நாசமடைந்துவிடும். அமெரிக்காவும் ஆசியாகண்டத்தவரின் பெருவெள்ளத்தால் மூழ்கி நிலவெல்லை அழிந்துபோவதற்கு மிடமாகும். ஆசியாவிலுள்ள ஜனநாயகக் கக்ஷிக்கவர்களின் ஆதிக்கம் பெருகுமானால் உலகம் ஒழுங்காக நடைபெறுவதோடு பரஸ்பர தேசத்துக்கு, பரஸ்பர ஜனங்களுக்குள்ளும் அளவிடக்கூடாத நன்மையும், ஒற்றுமையும் ஏற்படலாம்.

### அயர்லாந்தின்நிலைமை

லண்டன் நேஷன் பத்திரிகையின் அபிப்பிராயம்.

அயர்லாந்தில் நடைபெறும் அராஜகச் செயல்களைப்பற்றி ராய்ட்டர் தந்தி மூலம் கிடைக்கும் சமாசாரம் ஒருபக்கமிருந்தாலும் அதனுண்மை பொறுத்தமாக இருக்கிறதென்று நேஷன் பத்திரிகை அபிப்பிராயப்படுகிறது அதன் விவரம் பின்வருமாறு:—

இங்கிலீஷ் சட்டமானது நேபோலீஸார் வெடிகுண்டு எறியலாமென்று சொல்லும்படியான்மையில் நடத்தப்பட்டு வருகிறது. ஐரிஷ் கிராமங்களில், தினந்தோறும் நடைபெறும் சம்பவங்களும் கைதிகள் அடிக்கடி பட்டினிகிடந்து உண்ணா விரதங்கொண்டு அதன் மூலம் விடுதலை பெறுவதும் உண்மையே. ஐரிஷ் சமூகம் பிரிந்துவிட்டதென்று சொல்லும் சமாசாரம் உண்மையானதல்ல. கலகக்காரரின் நோக்கமும் வீணானதல்ல. அவர்களுக்கு ஆங்கில ஆட்சிமுறை பிடிக்காததால், தங்களுக்குச் சொந்தமான ஆட்சி முறை நடத்தவாரம்பிக்கின்றனர். தினசரிப் பத்திரிகைகளில் வெளிவராத விஷயம் ஒன்றிருக்கிறது. அதாவது பலமான ஐரிஷ் ஜாதியாரின் பலமான அதிகாரவர்க்கம் ஒழுங்கான முறையில் ஸ்தாபிக்கப்பட்டு அதன்கடி நடத்தப்பட்டு வருவதென்பதாகும். ஸின்பீன் கக்ஷியாரின் அதிகாரமும் ஆட்சியும் பகிரங்கமாய் நடத்த முடியாமற்போனாலும், ஜனங்களால் தெரிந்தெடுக்கப்பட்ட ஸின்பீன் பார்லிமெண்டும், அவர்களின் சட்ட திட்டங்களும் பொருளாதார சம்மந்தமாயும், காணி பூமிகள் சம்மந்தமாயும் ஒழுங்காக ஏற்படுத்தப்பட்டு அதன் மூலம் அமுலுக்கும் கொண்டுவரப்பட்டிருக்கிறது.

இம்முறை நிலம் விற்போருக்கும் வேலை செய்வோருக்கும் மிகுந்த சௌகரியத்தைக் கொடுப்பதோடு வெஸ்டுமினிஸ்டர்பார்லிமெண்டுசபை செய்யும் தீர்மானத்தைக் காட்டிலும் வெகு சீக்கிரத்தில் நடத்தக்கூடியது. சாதாரணமாகஜனநாயக தேசங்களில் நடத்தும் பான்மையில் ஸின் பீன் கோர்ட்டுகள் ரகசியத்தில் நடத்தப்பட்டாலும் கதிபதிகள் நியாயந்தவறாது செலுத்திவருகின்றனர். சாமான் போக்குவரத்தில் வேலை செய்வோர் ஆகாரச்சாமான்களை இறக்குமதி செய்வதில் மறுத்த சமயம் ஸின்பீன் கக்ஷியார் சரியானபடி கட்டுப்படுத்தி ஆகாரச்சாமான்களை எல்லோருக்கும் பங்கிட்டுகொடுத்துவந்தனர் இதனால் ஐரிஷ் ஜனங்களின் சாமான்கள் பிறநாடு செல்லாமல் அவர்களுக்குள்ளே ய செலவிடப்பட்டது மிகுந்த ஜாக்கிரதையை யுண்டாக்கியதுகுறிப்பிட்ட சில இடங்களை ஸின்பீனர்கள் தாங்களே ஆட்சி செலுத்திக்கொண்டும்வருகின்றனர், ஜனங்களும் அவர்களின் ஆட்சியில் சிரத்தைக்கொண்டு, ஒற்றுமையுடன் சமீபத்தில் நடந்த வேலை நிறுத்தல்களிலும் சாமான் இறக்குமதிகளிலும் ஒழுங்காக வேலை நடத்திவந்திருக்கிறது. இதுவரையிலும் அவர்கள் எந்த கவர்ன்மெண்டும் நடக்காத ஓர் ஆனந்தத்தையும் இப்புதிய கவர்ன்மெண்டால் அடைந்துவந்திருக்கின்றனர். போலீஸ், மாஜிஸ்திரேட்டுகளன்னியில் ஜனங்களும்பல வந்தகட்டு உட்படாமல், தாங்களாகவே தற்கால கவர்ன்மெண்டில் ஒற்றுமையுடன் நடந்துவருவது ஜனங்களுக்கு அன்னிய ஆட்சியிலுள்ள நிர்ப்பந்தம் தெளிவாகும். 1860-67ல் ஹங்கேரி தேசத்து ஜனங்கள் ஒழுங்காக நடத்தப்பட்ட சத்யாக்ரகிகளால் ஆயுதபலமன்னியில் ஹாப்ஸ்பர்க்கா ஆட்சிமுறையைத்தோற்கச்செய்து, ஹங்கேரி ராஜ்யத்திற்கு நியாயமான சுதந்திரம் அளித்ததற்கு ஒப்பாம். தேச சரித்திரத்தில் இதுகாறும் நடக்காத ஓர் அரிய சம்பவமாகவும் கூறலாம். ஹங்கேரியர்கள் நடந்து கொண்டதைப்பார்க்கிலும் ஐரிஷ் ஜனங்கள் தற்காலம் நடந்துகொண்டுவருவது மேன்மைபெற்றதென்றே சொல்லவேண்டும்.

### வருங்காலத்தை யாச்ரயிக்காத பிரிட்டன்.

பிரிட்டன் தேசம் வருங்கால நிலைமையைப்பற்றி சற்றும் ஆலோசியாமலிருந்துகொண்டிருப்பதாய் ஸாடிஸ்டு என்ற லண்டன் பத்திரிகை எழுதுகிறது.

வருங்காலநிலைமை யெவ்விதமிருந்தபோதிலும் அதன் மாறுதல்களை எவ்விதம் நடத்தலாமென்பதை பிரிட்டன் தேசத்தார் சற்றும் ஆலோசியாமலிருக்கின்றனர். தற்காலமிருந்துவரும் ஏகாதிபத்தியத்துடன் பெர்சியா, மெசபடோமியா, பலஸ்தீன் முதலான தேசங்களைச் சேர்த்திருப்பதோடு நமக்குத் தொந்தரவன்னியில் அவர்கள் செலவின் பேரிலேயே ஆண்டுகொள்ளலாமென்றதோற்றத்தின் மூலம் நம்மவர் நிச்சயம் செய்யலாம். இதனால் நாம் உலகத்துக்கு கொடுங்கோல் செலுத்தும் ஓர் கவர்ன்மெண்டு போலவும், நமது செய்கைகளின் மூலம் காண்பித்துக்கொள்ளக்கூடும். அயர்லாந்து வாசிகளின் நிலங்களைப் பிடுங்கி இங்கிலீஷ் ஸ்காட்சு, வேல்ஷ் முதலான பலருக்கும் பிரித்துக்கொடுக்கலாம். ஆனால் இவ்விதம் செய்வதி விருந்தும் எக்காலத்திலும் இவ்விஷயத்தை ஐரிஷ் ஜனங்களின் மனத்திலிருத்தும்படி உறுதிசெய்ததாகும். இதனால் உலகத்தின் பல பாகத்திலுள்ள பூமிகளை பிரிட்டன் பேராசைகொண்டு வியாபிக்க விருப்பங்கொண்டிருப்பதாய் உலகத்தாருக்கு பகிரங்க விளம்பரம் செய்ததுபோலாகும். அதோடு நமக்கு சமீபத்தில் அக்கரையில் 60 மைல் தூரமுள்ள ஒரு சிறிய தேசத்தை ஒழுங்கான முறையில் ஆளுவதற்கு சக்தியற்றவர்களென்றும் உலகத்தாருக்குக்காட்டிக்கொள்வதுபோலாகும்.

## நீதிக்குறிப்பு.

### மனிதர்க்குரிய ஐந்து உபதேசம் அல்லது அறிவாளரின் ஐந்து அடையாளங்கள்.

'அறிவு நிறைந்தார்' என அறிஞர்களால் போற்றப்பெறும் ஆறறிவுயிர் மனிதனுக்கு ஐந்து அடையாளங்கள் இன்றியமையாதனவாம். அவை முறையே (1) அழுக்காறின்மை, (2) பரிசுத்தம், (3) மங்கள மொழி, (4) ஆயாசமின்மை (5) ஆசையின்மை எனக் கூறப்படும். இவற்றின் செயல்களை இனி முறையே விவரிப்பாம்.

1. அழுக்காறின்மை: என்பது அரிய குணங்களுக்கெலாம் உறைவிடமெனத் துலங்கும் பெரியோர்களை அவமதியாமலும், தூஷணம் புரியாமலும் இருத்தல், மற்றுள்ள மனிதர்களின் நற்குணங்களைப் பெரிதும் ஆதரித்துப் புகழ்தல், அந்நியரிடத்துக் காணப்படுகின்ற தீய செயல்களைத் தனது பரிகாச மொழிகளால் புண்படக்கூறுமை முதலியனவாம். ஆனால், அன்பர்களே! மனிதரிற் சிறந்த தெய்வாம்சம் பொருந்திய மஹான்களெனப் புகழப்பெறும் பெரியோராலும் நீக்குதற்கரிய கொடுநோயெனக் கூறத்தகுமிவ்வழுக்காறை, நீக்கி வாழ்தலென்பது மனித வாழ்வின் மிகப் பரீக்ஷை நிலைமையாமென்பது, மனச்சாக்ஷியறிந்த விஷயம். ஆயினும், விவேகத்தினால் இத்தகைய குணமமைய்ப்பெற்றோர்க்கே மனித வாழ்க்கையில் உயரியஸ்தானமமைக்கப்பெறுமென்பது பெரியோர் துணிபு.

2. பரிசுத்தம் (தூய்மை) யென்பது, சுகாதார சாஸ்திர நூல்களில் "உட்கொள்ளத் தகாதவை" யெனத்தடுக்கப்பட்டுள்ள உணவுபொருள்களை யறவே நீக்குதல், எல்லா நன்மைகளையும் எளிதிலளிக்கின்ற பெரியோர் நட்பு, நன்னெறி பிறழாமை என்பனவாம்.

3 மங்களமொழி (நன்மை) என்பது, கொண்டாடத்தக்க நற்சரிதைகளில் நாள்தோறும் அன்புகொள்ளுதல், அதற்கு மாறுபட்ட செயல்களை விரும்பாமை என்பனவாம்.

4. ஆயாசமின்மை யென்பது, பெருந்துன்பம் வந்துற்ற காலையினும் அதனை மனத்தினால்சிறிதும்மதியாதிருத்தல், பிறர், தம்மீது பகிரும் குற்றச்சுமைகளைத் தூக்கிவைப்பினும் தான் அவற்றைக் கேட்டுக் கலங்காதிருத்தல், அக்குற்றங்களை, புகழ்மொழி போலும் அன்புடன் ஏற்றுத் தன்பாலுள்ள பிழைகளைப் பன்முறை வந்தனங்களுடன் அங்கீகரித்தல் முதலியனவாம் இதனை வேறொருவகையாலும் விவரிப்பதுண்டு. அதாவது:- 1 பொறுமை 2 கிருபை, 3 சிரிப்பு, 4 சந்தோஷம் 5 செய்நன்றியறிதல் முதலிய குணங்களே ஒழுகுதலேஆயாசமின்மை எனக்கொள்வதாம். இங்கு அம்முறைமையையும் சிறிது விவரிக்கின்றோம்.

1 பொறுமை:- தனக்கொருவன் பலபல பிழைகள் புரியினும் தான் அவற்றிற்குப் பிரதியாகத் தக்கதோர் தீமை புரியவேண்டுமென மனத்தினால் சிறிதும் நினையாது, அத்தகைய தீமைக்கு உட்படாது பெருங்குணத்தோடு தாங்கிநிற்றல்.

2 கிருபை:- நாம் எவ்வாறேனும் இப்பெருந் தீமையைப் பொறுத்துக் கொள்வோம் ஆயினும், 'எல்லாம்வல்லவனும், மறைந்து செய்யப்படுந் தீமைகளையும் மனத்தின் கண்ணே நின்று மாசற உணர்ந்து மறைகளின் மறைபொருளென மறைந்து விளங்கும் மாமாயனும் பரமேசன், இத்தீமை புரிந்தார்க்கு உரியதோர் தண்டனை செய்விப்பானன்றோ? ஆகா! என்னே இவனது வருங்காலத் துன்பநிலை! இத்துன்பத்திற்கு நாம்என்செய்வோம்?' எனப் பன்முறையும் 'பிறர்க்கு வாரா நின்ற துன்பங்களைத் தனதாகக்' கருதி-அவற்றிற்கு இரங்குதல்.

3 சிரிப்பு:- நம்மைப் பகைத்து நிற்பவர்களாய் விளங்குகின்ற இவர்களால், நமது அதிருஷ்டசம்பவங்களைச் சிறிதேனும் அழிக்குமாறு செய்ய இயலாது; ஆயினும் இவர்கள் தகாத மொழி கூட்டித் தீக்குறள்களால் ஜனத்திரளை ஒருவாறு மயக்கி நம்மைப் பகைக்குமாறு செய்பவும், தம் சாமார்த்தியத்தை விளக்கி உலகிலுள்ள ஏனையோரால் நமது புகழ்பொருள், பூஜிதை, (மரியாதை) முதலியசில நன்மைகள் நம்மை விட்டகலுமாறு செய்யவும் இவர்களால் முயலுதல் கூடும்! ஆகா! என்னே இவர்களின் அறியாமை! அத்தகையதீயகுணச்செயல்களால் நம்மையும் தம்மைப்போலாக்க முயல்கின்றனரே!' எனச்சிரித்தலாம்.

4 செய்ந்நன்றியறிதல்: "நாம் நமது சொந்தக்குற்றங்களை அறவே மறந்து நிற்கின்றோம்; அவற்றை நாம் நினைக்கவும் விரும்புகின்றோமில்லை. நாம் இந்த நிலைமையிலிருக்குங்கால் இவர்கள் நம் மிடத்துள்ள குற்றக்குவியல்களை ஒருங்கே திரட்டி-நம் விவேக முகத்திற்கெதிரே காண்பித்து நமக்குப் பெரிதும் உபரித்த பெரியரன்றோ? இவர்களின் பெருதவி பாராட்டத்தக்கதேயாம்" என மனத்தில் அன்போடுகருதல்.

5. ஆசையின்மை:- யென்பது தான் மெய்வருந்திச் சம்பாதித்தபொருளைக் கொண்டு திருப்திபெறுதல், பிறர் பொருள்களைத் தம்பொருளாக்க மனத்தாலும் முற்படாமை, பிறன்மனை புகுதாமை முதலியனவாம்.

### ருஷிய மதிமான்களின் வேண்டுகோள்.

ருஷியாவிலுள்ள புத்திசாலிகளிற் பலர் சேர்ந்து ருஷியாவின் உள்நாட்டு நிலைமையையும், வெளிநாட்டு சம்மந்தத்தையும் சீர்படுத்துவதற்காக அடியிற் காணும் சில ஆலோசனைகளை பகிரங்கப்படுத்தியிருப்பதை லண்டனிலுள்ள நேஷன் என்ற பத்திரிகை பின்வருமாறு எழுதியிருக்கிறது.

ருஷியாவின் உள்நாட்டு வியவகாரம் தீரும் வரை இதர தேசங்களின் சம்பந்தத்தை விட்டுப் பிரித்து நிர்வாகம் செய்வது கஷ்டமான காரியம். இதர தேசத்தாரின் நன்மைக்கும், ருஷியாவின் நன்மைக்கும் பொருத்தமானதுமல்ல. ஆகையால் தற்கால இந்த நிலையில் (1) ருஷியாவின் உள்நாட்டு விஷயங்களின் ஆயுதபலத்தோடு தலையிட்டு அடக்கும் முறை ஒழியவேண்டும், (2) எந்த ஆட்சி முறையிருந்தாலும் தொழிலாளர், நிபுணர்களின் சம்மந்தமும் மறுபடியும் ஒன்றுசேரவேண்டும். (3) பொருளாதாரம், பணம், நிபுணர்களின் கூட்டுறவு முதலியவைகளை உத்தாரணம் செய்து ஜனங்களுடன் நேரான சம்மந்தம் வைத்துக்கொள்ளும்படி செய்தால், ருஷியா தற்காலமடைந்திருக்கும் கஷ்டங்களினின்றும் நிவர்த்தியாகி, புதிதான நாகரீக வாழ்வைபெறும் இதற்கு ஐரோப்பா வாசிகளெல்லோரும் ருஷிய ஜனங்களுடைய வேண்டுகோள்களுக்கிணங்கி, அவர்களிடம் மிகுந்த அனுதாபத்தோடு, ருஷிய ஜனங்களின் பெரு முயற்சியில் சமாதானமாய் செல்லுமாறு உதவிசெய்யக் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

### வேதனையில்லாத சஸ்திர சிகிச்சை.

ரசாயன சாஸ்திர ஆராய்ச்சியில் புதிது புதிதான பல அருமையான விஷயங்கள் கண்டுபிடிப்பதில் வேதனையில்லாமல் சஸ்திர சிகிச்சை செய்யும் மார்க்கத்தைப்பற்றி அமெரிக்காவிலுள்ள ஸ்பிரிங் பீல்டுவீக்லி ரிபப்ளிகன் என்றபத்திரிகை பின் வருமாறு எழுதுகிறது:—

இப்புதிய முறையானது வியாதிஸ்தர்களை மோகனம் செய்யாமலிருப்பதோடு அருவருப்பு மில்லாமலிருக்கிறது. வியாதிஸ்தனுக்கு சஸ்திரக்கிரியை செய்யும் பிரதேசத்தில் இம்மருந்தை யுபயோகிப்பதால் அங்கச்சேதனமாகும் பிரதேசம் வேதனையில்லாமலதோடு, நேரில் வைத்தியர் செய்யும் ஒவ்வொரு வேலையும் பார்ப்பதற்குச் சாதகமாகும். அதாவது கட்டிகளறுக்கும் சமயத்திலும், பல்லுகள் பிடுங்கப்படும் சமயத்திலும் காயங்கள் தைக்கப்படும் சமயத்திலும், இதுபோன்ற இன்னும் சிறு சஸ்திர சிகித்சையிலுங்கூட மோகந்தரக்கூடிய மருந்தை முற்காலத்தில் உபயோகிக்காமல்சௌகரியமான இப்புதியமுறையினால் வேதனையில்லாமலாய்விடுகிறான்.

## விநோதக் குறிப்புகள்

### வேணு, வைத்தியர் வீட்டுக்குச் சென்ற கதை.

வேணுவின் எஜமானுக்கும், வேணுவுக்கும் நடந்த சம்பாஷணை.

எஜமான்:— (வேணுவைப்பார்த்து) வேணு! நீ வைத்தியர் வீட்டுக்கு விரைவில் சென்று, எனது கால்நோய்க்கு மருந்து வாங்கி வருவாயாக.

வேணு:—வைத்தியர், வீட்டி லிருக்கின்றாரோ என்னவோ!

எஜமான்:—வைத்தியர், வீட்டில் இருப்பார். நீ சென்று வாங்கிவரலாம்.

வேணு:—வைத்தியர் வீட்டிலிருந்த போதிலும் மருந்து கொடுப்பாரோ என்னவோ!

எஜமான்:—அவசியம் மருந்து கொடுப்பார், நீ போய்வரலாம்.

வேணு:—மருந்து கொடுத்தபோதிலும், அது கால் நோய்க்கு ஏற்றதாயிருக்குமோ என்னவோ!

எஜமானன்:—கால் நோய் நீங்கும் வண்ணமே அவர் மருந்து கொடுப்பார். நீ இனியேனும் சாக்குச் சொல்லாது செல்லலாம்.

வேணு:—சரி, நானும் வைத்தியர் வீட்டுக்குப் போகின்றேன்; வைத்தியரும் மருந்து கொடுப்பதாக வைத்துக்கொள்வோம்: ஆயினும், தங்களுக்கு கால் நோய் நீங்குமோ என்னவோ!

எஜமான்:—அடா! சோம்பேரி! நீ இருந்த இடம் விட்டு நகராது இவ்வாறெல்லாம் வீணே வாது புரின்றனையே! இதுதான் வேலைக்காரன், எஜமானனுக்குப் பணிந்து நடத்தலோ?

வேணு:—அல்ல; அவ்வாறு, எஜமான் கோபித்துக் கொள்ளக்கூடாது. ஆனால், என்றைக்கிருந்தாலும் இச்சரீரம் நாசமுறுவதுதானே! (என்று நிதானமாக பதிற்கூறினான்.)

அதுபோல், இந்தியமகாஜனங்களாகிய எஜமானர்கள், தமது வரிப்பணக்கூலியாளராகிய சிலரை தமது சமூகம் நன்கு நடை பெறுமாறு செய்தற்குரிய சுயராஜ்ய அருமருந்தை "பிரிட்டிஷ் நீதிச்செங்கோல்" என்னும் வைத்தியரிடமிருந்துவாங்கிவரும்வண்ணம் பன்முறை வற்புறுத்துகின்றனர். அதனைச்செவியுற்ற அதிகாரி கவர்மெண்டு, தாம் இருந்த விடம் விட்டு நகராது, "சுயராஜ்யம் கொடுத்தால் இந்தியர்களின் வாழ்க்கை நன்கு நடை பெறுமோ?" எனச் சாக்குப் போக்குச் சொல்லுகின்றனர்,

* *

### சிரஞ்சீவிகள்

இவ்வுலகில் வாழும் பிராணிகளுக்குள் 'திமிங்கிலம்' என்னும் நீர்வாழும் ஜந்துவே முதலாவது, 'சிரஞ்சீவிக் கூட்டத்தில்' சேர்க்கத் தக்கதாம். அதன் வயது 1000-த்திற்குக் குறையாத வருடங்கள் என, கூவியர் என்னும் பிராணி சாஸ்திர நிபுணர் கூறுகின்றனர், இதன் சரீரமொன்றே, மற்ற ஜந்துக்களெல்லாவற்றைப்பார்க்கிலும் சிறந்த பலமுள்ளதாயும், காணப்படுகின்றது. உடற் பருமனில் இதற்கடுத்ததாகக்கூறவேண்டிய(தம்பி) முறையிலுள்ளது யானை. இது 400 வருடங்கள் வரை ஜீவிக்குமெனக் கூறுகின்றனர். அலெக்ஸாண்டர் என்னும் வீரசிரோமணியின் வாழ்க்கைச் சரிதத்தில் "அஜாக்ஸ்" என்னும் பெயர் புனைந்ததோர் யானையானது, அவனது போர் வலிமையினால் சம்பாதிக்கப்பெற்று, அது 350 வருடங்கள் வரை வாழ்ந்துவந்ததெனக் கூறப்பட்டுள்ளது'

* *

### சில ஜெந்துகளின் வயது.

பூனைக்கு வயது15. முயல்களின் வயது7. கரடிகளின் வயது 20. (ஆனால் இந்தக் கரடி ஜாதியில் தோன்றிய ஜாம்பவான் எவ்வளவோ காலம் வரை வாழ்ந்துவந்தார் என்பதை இந்தப் பிராணி தத்துவ சாஸ்திரி ஒத்துக்கொள்வதில்லை!)

நாணைக்காட்டிலும் தந்திரத்திற்

இதன் தொடர்ச்சி 6ம் பக்கம் பார்க்க.

